# பராமுகம் ஏன்?

இரு இசை நாடகங்கள்



ஆசிரியர் :

பாவலர் என். எஸ். சிதம்பரம்



இளங்கோ மன்றம்

தெப்பக்குளம் : : திருச்சி.

மன்ற மலர் — 1

முதற் பதிப்பு அக்டோபர்—1951

விலை அணா ஆறு.



## சமர்ப்பணம்

வாழ வழிகாட்டும் வள்ளுவப் பெருமானின் திருக்குறளைப் போதிப்பதே தம் வாழ்வின் சீரிய குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றி வரும் நாகை தேசிய உயர்நிலைப்பள்ளி, ஆசிரியர்ப் பெருந்தகை 'திருக்குறள் மணி' எஸ். பி. சண்முகசுந்தரம் பிள்ளை பி. ஏ., எல். டி., அவர்களுக்கு

—ஆசிரியன்.

சிட்டி அச்சகம், திருச்சிராப்பள்ளி.

# பதிப்புரை

பாவலர் என். எஸ். சிதம்பரம் அவர்களின், தனித் தமிழ் இன்சுவைக் கருத்துக்களையும் இன்பம் பயக்கும் கவிதையுள்ளங்களையும் "கவிச்சொல் கேளீர்" என, திருச்சி "வானொலி" நிலையத்தார் அஞ்சல் செய்தனர். பாவலரின் வானொலி அஞ்சல்கள்தான் "பராமுகமேனோ?" "மதயானை" எனும் இரு சுவைமிக்க இசை நாடகங்கள். பாவலரின் புலமை நாட்டு மக்களுக்குத் தேவையானபடியால், இன்று உங்கள் முன், பராமுகம் ஏன்? எனும் வடிவில் மன்றத்தின் முதன் மலராக அளிக்கின்றோம்.

இளங்கோ மன்றத்தார்

# பராமுகம் ஏன்?

## பாத்திரங்கள் :

1. அருணசலம் (கதா நாயகன்)
2. கம்பெனி மானேஜர்
3. கருணநிதி (அருணசலத்தின் ஆப்த நண்பன்)
4. கனகம் (கதா நாயகி. அருணசலத்தின் மாமன் மகள்)
5. வசந்தா (கதாநாயகி கனகத்தின் ஆருயிர்த் தோழி)

## கதைச் சுருக்கம் :

பலன் கிடைக்குமென நாடிப் போகும் இடங்களிலெல்லாம் பராமுகமாயிருக்கிறார்கள். அருமையாக நேசிக்கும் ஆருயிர்க் கனகமும் கூடப் பராமுகமாயிருந்து விடுகிறாள். இறுதியில் நண்பனும் பராமுகமாயிருக்கக் கண்டு மனமுடைந்த அருணசலம் இவ்வுலக வாழ்வை வெறுத்துத் துறவை மேற்கொள்ளுகிறான். ஆனால் அந்தத் துறவும் வெற்றியளித்ததா?

# பராமுகம் ஏன்?

---

## காட்சி 1

[வேலைக்காகக் கம்பெனி மானேஜரிடம் செல்லுகிறான் அருணாசலம். மானேஜரின் பராமுகமான பதில்]

இராகம் : பேகட. தாளம் : ரூபகம்.

அருணாசலம் :

இன்னும் பராமுகம் ஆமோ?
இதுவும் உமக்கு நீதியாமோ? (இன்)
பன்முறையாய் நடந்தலுத்தேன்
பாரீர் என்குறை தீரீர் ஐயா! (இன்)

மானேஜர் : யாரய்யா நீர்? எங்கே வந்தீர்?

அருணா : என்ன இப்படிக் கேட்கிறீர்கள். என்னை உங்களுக்குத் தெரியவில்லையா. நான் அருணாசலம்.

மானே : அருணாசலமாயிருந்தால் என்ன! சிவ சிதம்பரமாயிருந்தால்தான் என்ன! உம்மைப் பார்த்த முகம்கூட எனக்குத் தெரியவில்லையே!

அருணா : அதற்குள்ளாகவா என்னை மறந்துவிட்டீர்கள். அட தெய்வமே!

மானே: என்னய்யா தெய்வத்தைக் கூப்பிடுகிறீர். தெய்வத்தைக் கூப்பிடுவதற்கு இங்கு என்ன அப்படி நடந்துவிட்டது?

அருண: எல்லாம் என் விதி! ஐயா, உங்கள் வீட்டிற்கு எத்தனையோ தடவைகள் நடந்து நடந்து வந்து, திரும்பித் திரும்பிப் போயிருக்கிறேன். ஆகட்டும், கவனிக்கிறேன் என்று நீங்களும்தான் எத்தனையோ தடவை சொல்லி இருக்கிறீர்கள்.

மானே: உண்மையில் அப்படிச் சொல்லியிருக்கிறேனா? சரி. உம்முடைய பெயர்? என்ன சொன்னீர்?

அருண: அருணாசலம்

மானே: வெறும் அருணாசலம்தானா? எல்லாவற்றையும் பூர்த்தியா, நான் திரும்பத் திரும்பக் கேக்கிறதுக்கு இடம் வச்சுக்காமச் சொல்லுமய்யா.

அருண: ம. அருணாசலம், பத்தாம் வகுப்பு பூர்த்தியின்மை.

மானே: பூர்த்தியின்மையா! என்னய்யா புது விதமான தகுதி அறிமுகமாயிருக்கிறது! பத்தாம் வகுப்பு தேறவில்லையா நீர்?

அருண: நன்றாகத்தான் படித்தேன். ஆனால், பரீட்சை என்னும் மாபாதகன் என்னைச் சதி செய்துவிட்டான். பரீட்சைக் கேள்விகளும் என்மேல் பராமுகமாயிருந்துவிட்டன.

மானே: சரி சரி, போதுமய்யா. இப்போது உமக்கென்ன வேண்டும்?

அருணு: நான் மகிழ ஒரு வேலையும் தருவீரே
நடந்த நடையை எண்ணிப் பார்ப்பீரே
வான் புகழும் நலமுடையீர்
வாரீர் என்முறை கேளீர் துரையே (இன்)

மானே: அப்படி வாரும் வழிக்கு. இப்போதுதான் ஞாபகம் வருகிறது. வேலையா வேண்டும்? எப்போதுபார்த்தாலும், எல்லாரும் வேலை வேலைன்னு வந்து, என்னை மொய்த்தால்...

அருணு: அப்படிச் சொல்லக்கூடாது நீங்கள். எப்படியாகிலும் எனக்கொரு வேலை பார்த்துத்தான் தரவேண்டும். கோடிப் புண்ணியம் உண்டு உங்களுக்கு. எந்த வேலையாயிருந்தாலும், செய்யச் சித்தமாக இருக்கிறேன். பாராமுகமாயிருக்கக்கூடாது.

மானே: வேலை காலி இருப்பதாகத் தெரியவில்லை அருணசலம். என்னமோ பார்க்கிறேன்.

அருணு: (ஏமாற்றத்துடன்) அப்படியா...

இன்னும் பாராமுகம் ஆமோ?
இதுவும் உமக்கு நீதியாமோ?

## காட்சி 2

[அருணசலம் தன் அருமை நண்பன் கருணநிதியிடம் வேலைக்காகப் போய்வந்த

விபரத்தைக் கூறுகிறான். கருணாநிதி வேறு ஆலோசனை கூறுதல்.]

கருணாநிதி: அருணாசலம், ஏனிப்படிச் சோகமாய் உட்கார்ந்திருக்கிறாய்? வேலை கிடைத்ததா?

அருணாசலம்: எங்கே போனாலும் என் நிழலும் கூடத்தான் வருது, கருணாநிதி.

கருணா: கம்பெனி மானேஜர் வேலையில்லை யென்று சொல்லிவிட்டாரா?

அருணா: என்னை அடிக்கடி பார்த்தவர், அவருக்கே என்னை அடையாளம் தெரியவில்லையாம்!

கருணா: என்ன பராமுகம்!

அருணா: அவரை இனி நம்புவதில் எவ்வித பயனும் இல்லை கருணாநிதி. வீட்டிலோ வேலையில்லா ததால் பெற்றதாய்கூட ஒவ்வொரு சமயம் பராமுகமாயிருக்கிறாளென்றால் அப்புறம் பார்த்துக்கொள்ளேன்.

கருணா: உண்மைதான். உலகம் இப்படித்தான் இருக்கும் அருணாசலம். அதற்காக எல்லாம் நீ வருத்தப்படாதே. நான் ஒரு யோசனை சொல்கிறேன்.

அருணா: என்ன, யோசனையா, சொல். அதன் படியே நடக்கக் காத்துக்கொண்டிருக்கிறேன். சொல்.

கருணா: பொறு அருணாசலம். அவசரப்பட்டு விடாதே. அவசரம் வீண். உன் மாமன்

மகள் கனகம் உன்னிடம் உயிரென்று சொன்னயல்லவா.

அருண: ஆமாம். அவள் என்னையேதான் மணக்கப்போகிருள். எனக்கு உறுதிகூடக் கூறியிருக்கிருள். கனகத்தை மட்டும் நான் மணந்துவிட்டால் எனக்கு அப்புறம் வேலை தேடவேண்டும்கிற அவசியம்கூட இல்லை. கனகத்தின் சொத்திற்கு நானே அதிபதியாகி விடுவேன்.

கருண: கோட்டை கட்டுகிறதெல்லாம் இருக்கட்டும் அருணசலம். இப்போது நீ என்ன செய்ய வேண்டும் தெரியுமா. கனகத்தை நேரில் சந்தித்துத் திருமணத்தை முடிப்பதற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகக் கவனிக்கும்படிச் சொல்லவேண்டும்.

அருண: நீ தருண விளக்குதான் கருணநிதி. நல்ல யோசனை. அப்படியே செய்கிறேன்.

## காட்சி 3

[அருணசலத்தினிடம் கனகமும் அவள் தோழி வசந்தாவும் வேண்டுமென்று பராமுகமாயிருத்தல்.]

வசந்தா: கனகம், அதோ உன் அத்தான் வருகிருர்.

கனகம்: யார், அத்தான! எங்கே?

வச: அதோ பார் தூரத்தில்...

கன : என்மேல் அவருக்கு உயிர் வசந்தா. என்னைக் காணுமல் இருக்கவே மாட்டார்.

வச : கனகம், அருணுசலம் உன் அத்தான் தானே ?

கன : அதற்கென்ன ?

வச : ஒன்றுமில்லை. ஒரு சின்ன தந்திரம் செய்யவேணும்.

கன : தந்திரமா ?

வச : ஆம். அவர் வந்தால் நீ அவரிடம் பேசக் கூடாது. நானும் வழக்கம்போல் முந்தி பேசப் போவதில்லை. வரவேற்கப் போவதும் இல்லை.

கன : இதென்ன விஷப் பரீட்சை வசந்தா. ஒரு வேளை அவர் கோபித்துக்கொண்டு போய் விட்டால் ?

வச : அப்படியெல்லாம் போகமாட்டார். உன் தரிசனத்திற்காக அல்லும் பகலும் அறுபது நாழிகையும் ஏங்கியிருக்கும் அவரா, கோபிக்கப் போகிறுர் ! உன்னுடைய குறும்புத்தனம் அவருக்கு மகிழ்ச்சியைத் தவிர வேறு என்ன தரும் ?

கன : என்னைக் குறும்புக்காரியாக்கிவிடப் பார்க்கிருய் ? அப்படித்தானே.

வச : சரி சரி, அதோ உன் அத்தானும் வந்துவிட்டார். பார்க்காததுபோல இரு கனகம்.

கன: ஆகட்டும் வசந்தா.

(கனகமும் வசந்தாவும் அருணாசலத்தின் வரவைக் கவனிக்காதது போலிருக்கிறார்கள். அருணாசலம் கனகத்தின் தோழியாகிய வசந்தாவைக் கூப்பிடுகிறான்)

அருணாசலம்: வசந்தா

வசந்தா: (மௌனம்)

அருணா: வசந்தா வசந்தா, நான் கூப்பிடுவது உன் காதில் விழவில்லையா? உனக்குக் கூடவா என்னை அடையாளம் தெரியவில்லை.

வச: (சிரிப்பு)

அருணா: என்னைக் கண்டால் உனக்கு ஏளனமாக இருக்கிறதோ? சரி, நீ பேசாவிட்டால் போ, கனகம் இருக்கிறாள். அவள் பேசினால் நீயும் தானாகவே வந்து பேசுகிறாய். கனகம், கனகம்

கன: (மௌனம்)

அருணா: கனகம், என்ன படிப்பில் மூழ்கி விட்டாயா? இங்கே வந்திருக்கிறது யார் என்று கொஞ்சம்தான் திரும்பிப் பாரேன். (சிறிது விநாடிகள் பொறுத்து) கனகம், மௌனியாகத் தான் ஆகிவிட்டாய். சற்று தலை நிமிர்ந்து பார்க்கமாட்டாயா? என்ன, ஒன்றுக்கும் பதிலே இல்லை! என் மேல் உனக்குமா வெறுப்பு? பராமுகமா?

இராகம் : மோஹனம். தாளம் : ஆதி.

பல்லவி

என்னிடம் பராமுகம் கொண்டனையோ — என்றன்
இதயம் தவிப்பதும் நீ கண்டனையோ அன்பே! (என்)

அநுபல்லவி

உன்னிடமே நானும் என்னபிழை செய்தேன்
உரையாமல் மௌனமும் சாதித்தால் நலமோ? (என்)

சரணம்

காதல் வானத்தின் கனிமதியே எனவே
கழன்றதும் பொய்யாமோ கண்மணியே சொல்வாய்!
சோதனை செய்யாதே சுகுணநல் வல்லி நீ
சொன்னதெல்லாம் நீயே மறந்திடல்முறையாமோ? (என்)

## காட்சி 4

*[அத்தான் அருணாசலத்தைச் சமாதானம் செய்யப் போகும்படி வசந்தா கனகத்திற்குக் கூறுதல்.]*

**கனகம்:** என்ன வசந்தா, வந்தவர் இப்படி விர்ரென்று உடனே திரும்பிவிட்டாரே.

**வசந்தா:** கனகம், நீ பிழை செய்துவிட்டாய். நான்தான் சொன்னேன் என்றாலும் நீ இப்படி ஒரேயடியாகவா அவர் திரும்பிப் போகும் வரையிலும் பேசாமலிருப்பது?

**கன:** எல்லாம் உன்னால் வந்த வினை.

வச : நான் என்ன ஒரேயடியாகவா வாயை மூடிக் கொண்டு பதுமை மாதிரி இருக்கச் சொன் னேன். காரியத்தைக் கெடுத்துவிட்டாயே. அவர் போன விதத்தைப் பார்த்தால் ... ...

கன : ஐயோ, தெரியாத்தனமாக நடந்துகொண் டேனே. அவர் என்னைப்பற்றி என்ன நினைத் தாரோ.

வச : ஏன் வீணுய்க் கலங்குகிருய். வழியிருக்கிறது கனகம்.

கன : என்ன வழி

வச : அவரை நீயே இன்று மாலை சென்று சந்தி. எல்லாம் சரியாய்ப் போயிடும்.

கன : நல்ல யுக்திதான் வசந்தா.

## காட்சி 5

[அருணுசலமும் கருணுநிதியும் பேசிக்கொண் டிருக்கிருர்கள். அதுசமயம் கனகம் வருகிருள்]

கருணுநிதி : கனகத்தினிடம் போய் வந்த விஷயத் தைப்பத்தி, நீ என்னிடம் இன்னும் ஒன்றுமே சொல்லலையே அருணுசலம்.

அருணுசலம் : சொல்வதற்கு என்ன இருக்கிறது, கருணுநிதி. நான் யாரை நோவது ? தன்னை நோவனே, பிறரை நோவனே, தற்காலமதை

நோவனே, சற்றும் தெளிவில்லாத என் கர்ம மதை நோவனே .... (பாட்டாகப் பாடுகிறான்)

கருணு: சரி, போதும் அழுகைப் படலம். நிறுத்து அருணுசலம். கனகம் உன்னை மணக்க மறுத்து விட்டாளாக்கும்.

அருணு: மறுத்துவிட்டாலும் பரவா யில்லையே. போனவனைப் பார்த்தும் பார்க்காதது போல் அல்லவா இருந்துவிட்டாள். வாய் திறந்து ஒரு வார்த்தை கூட கனகம் பேசவில்லை. அவள் தோழி அந்த வசந்தா இருக்கிறாளே, அவளும் கூடப் பேசவில்லை.

கருணு: அப்படியா நடந்துவிட்டது. ஒரு சமயம் உன்னைச் சோதித்துப் பார்த்திருக்கலாம்.

அருணு: எரிகிற நெருப்பில், எண்ணெய் விடுவது போல என்ன சோதனை வேண்டிக்கிடக்குது. நான் கனகத்தை இன்றோடு மறந்துவிட்டேன்.

கருணு: அப்படியெல்லாம் வைராக்கியம் வேண் டாம். அருணுசலம், அதோ வெளியே பார்.

அருணு: ஆமாம், கனகம் வருகிறாள். நான் இனி அவளிடம் பேசப்போவதேயில்லை.

கருணு: கனகம் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுச் சமாதானம் செய்வதற்காகத்தான் வருகிறாள்.

அருணு: யாருடன் சமாதானம்? யார் அதை விரும்புகிறார்கள்?

கன : என்ன சொல்லுகிறீர்கள் அத்தான். சமாதானமடையாதா உங்கள் மனம்? ஏன் திரும்பி வந்துவிட்டீர்கள். ஏதாகிலும் அவசர வேலையிருந்ததா ?

அருணு : (மௌனம்)

கன : என்ன, பேசவே மாட்டேன் என்கிறீர்களே. உங்களுக்கென் மீது கோபமா? கொஞ்சம் வாய் திறந்து ஒரு தடவை கனகம் என்ருவது சொல்லுங்களேன்.

அரு : (மௌனம்)

கன : நீங்கள் வந்தபோது நான் பேசவே இல்லைதான். ஏன் என்று கேட்காமல் பராமுகம் சாதிக்கிறீர்களே.

அரு : (மௌனம்)

கன : என்மேல் குற்றமில்லை அத்தான்.

இராகம் : சஹாணு. தாளம் : ஆதி.

பல்லவி

ஏதோ பராமுகம் மாதென் மீதில்
ஏகனே வேகனே போகனே யோகனே (ஏதோ)

அநுபல்லவி

தூதோ அறியேன் வாதோ அறியேன்
நாதா என்றுமை நம்பியும் இருந்தேன் (ஏதோ)

சரணம்

குற்றமும் பொறுத்தே குணமும் கொள்வீர்
கோபமும் மறந்தே தாபமும் தெளிவீர்
நற்றவ மணியீர் நானுமை யன்றி
நனவிலும் ஒருதுணை கனவிலும் காணேன் (ஏதோ)

## காட்சி 6

[அருணாசலம் கனகத்தினிடம் பேசவில்லை யென்று கருணாநிதி பராமுகம் காட்டல்]

அரு: கருணாநிதி

கரு: (மௌனம்)

அரு: கருணாநிதி, ஏன் பேசமாட்டேன் என்கிறாய்.

கரு: என்ன உன்னிடம் பேசவேண்டியிருக்கிறது. ஒரு மங்கை தான் செய்த குற்றங்களுக்கு மன்னிப்பு வேண்டி மன்றாடும்போது, ஒரு வார்த்தைகூடப் பேசாமலிருப்பதுதான் மனிதத் தன்மையோ?

அரு: சரிதான். காரணம் புரிந்தது கருணாநிதி. கனகம் செய்தததைத்தான் நானும் திரும்பச் செய்தேன்.

கரு: சித்தம் குழம்பினால் இப்படித்தான் பதில் வரும்.

அரு: ஆமாம். கோடைக்காலத்து வெய்யில் வேறு. வெம்மையும், வாழ்க்கையில் வெறுப்பும் என்றால் தாள முடியவில்லை கருணாநிதி.

கரு: சரி, நீ எப்படியாகிலும் போ. அருணசலம், இனி உன் காரியத்தில் நான் ஒருபோதும் பிரவேசிக்கவே மாட்டேன். உன்னைப் பார்க்கவும் மாட்டேன்.

அரு: ஏது நீயும் பராமுகம் காட்டத் துணிந்துவிட்டாயா? முள்மேல் முள்ளா? கல்மேல் கல்லா?

இராகம்: பூர்விகல்யாணி தாளம்: ஆதி

தோழா பராமுக மானல் – வாழ்வினில்
துணையே செய்வார் யாரே – நேரே (தோ)

பாழாய் நானும் பரிதவித் திடவே
பார்த்திடல் நன்ருே பகராய் நண்பா (தோ)

அரு: (திரும்பவும் கூப்பிடுதல்) கருணநிதி

கரு: (மௌனம்)

அரு: கருணநிதி, அருமைத் தோழனென்று உன்னை நினைத்தேன். நீயும் நீங்கிவிட்டாயா? வேலைக்குச் சென்றேன். அங்கே பராமுகம்! கண்ணுக்குக் கண்ணன கனகமும் பராமுகம்! பெற்ற தாய் தந்தையர் பராமுகம்! கடைசியில் நண்பனுகிய உன்றன் பராமுகம்! சே, என்ன உலகம்! ஆசாபாசங்களும், அல்லற் பாதைகளும் நிறைந்த வாழ்வே வேண்டாம்! இனித் தவம் செய்து பேரானந்தமடைவோம்! கடவுளுமா பராமுகமாயிருந்துவிடப் போகிருர்; ஏமாற்றும் வஞ்சகமும் நிறைந்த இந்தப் போலி உலகத்தாரைப் போல.

கரு: காட்டிற்கா அருணுசலம்? சரி, கடவுளையே கண்டு வரம் வாங்கி வா. உன் யோசனையே யோசனைதான்.

## காட்சி 7

[காட்டிற்குத் துறவியாகிச் சென்ற அருணு
சலத்தினிடம் ஒரு சாது போல் வேடம்
கொண்டு கருணுநிதி செல்லுகிறுன்.]

அருணுசலம்:

இராகம்: நாதநாமக் கிரியை தாளம்: ஆதி

இந்தப் பராமுகம் ஏனே
என்னருங் கோனே (இந்த)

சந்ததமும் உன்றன் நினைவோடிருந்தேனே
சகல புவன பரிபாலனே சீலனே (இந்த)

கரு: சுவாமி, வணக்கம்.

அரு: வணக்கம் சுவாமி, தாங்கள்........

கரு: தங்களைப்போல ஒரு சாதுதான். காட்டில் நெடுங்காலம் கடுந்தவம் இயற்றியும் கடவுளுக்குக் கருணை பிறக்கவில்லை.

அரு: ஆம். கடவுளுக்குக்கூட ஏனிந்த பராமுகம்! சுவாமி, பொய்மிகுந்த புவி வாழ்க்கையில் எல்லோருந்தான் பராமுகமாய் இருக்கிறுர்கள் என்றுல்......

கரு: கடவுளும் பராமுகமாயிருக்கிறுர் என்று தானே, கருதுகிறீர்கள்?

அரு: கடவுளின் பராமுகந்தான் இருக்கட்டும். ஞானமாவது உதயமாயிற்ரு? இல்லை சுவாமி. தினமும் நானும்.

இராகம்: சுருட்டி தாளம்: ஆதி

பராமுக மாகுமா
தொண்டனிடம் (பரா)

இராவும் பகலும்உன் இணையடி தொழுவார்க்கே
இன்னருள் சுரந்தாளும் இறைவனும் நீயன்ரே! (பரா)

இப்படியேதான் கதறிக்கொண்டிருந்தேன்.

கரு: கதறிக்கொண்டிருப்பதிருக்கட்டும் சுவாமி. தாங்கள் உண்மையிலேயே உள்ளத்துறவு பூண்டு வந்தவரா? தங்கள் பெயர் அருணுசலந்தானே ?

அரு: ஆம். என் பெயர் தங்களுக்கு எப்படித் தெரியும். ஆச்சரியமாயிருக்கிறதே. சுவாமி, என் பெயர் உங்களுக்குத் தெரிந்திருக்கும் போது, என்னைப்பற்றிய சகல விருத்தாந்தங் களும் தெரியுமே.

கரு: நன்ருகத் தெரியும், சுவாமி அருணுசலம். நான் சொல்லுகிறேன். தங்களுக்கு இந்த சாதுக்கோலம் தகவே தகாது. தங்கள் மனம் அல்லும் பகலும் சலனம் ஆகிக்கொண்டே இருக்கிறது. இவ்வுலக இச்சையே உங்கள் மனத்தில் நிறைந்திருக்கும்போது, பேரின்ப

மயமான இறைவன் உங்களுக்கு எப்படி தரி சனம் தருவான்.

அரு: உண்மைதான் சுவாமி. என் மன நிலையை அப்படியே அப்பட்டமாகக் கூறிவிட்டீர்களே. மன ஒருமையும் தவ வலிமையும் இல்லாத தனுல்தான் இறைவனும் என்மீது பராமுகமா இருக்கின்ருன் போலும்!

கரு: அதிலென்ன சந்தேகம்! சுவாமி அருணு சலம், இன்றே இப்போதே உங்களுடைய சாதுக்கோலத்தைக் கலைத்துவிடுங்கள். உண்மையான வைராக்கிய சித்தமும் இல்லாத படியால் நானும்கூட என் சாதுக்கோலத்தை கலைத்துவிடுகிறேன். பாருங்கள். என்னை யாரென்று தெரிகிறதா?

அரு: யார், கருணுநிதியா? நீயா பொய்த்தாடியும் மீசையும் வைத்துக்கொண்டு வந்தாய்? முற்றும் உணர்ந்த அசல் ஞானியென்றல்லவா நினைத்துவிட்டேன்.

கரு: ஈட்டியை ஈட்டியாலேதானே வெல்லணும். அதெல்லாம் இருக்கட்டும். உனக்காகக் கனகம் ஏங்கி ஏங்கி, எலும்பாய்த், தோலாய், உருகிக் கரைந்து இளைத்துவிட்டாள். அருணுசலம், நீ வந்தவுடன் கல்யாணம் நிச்சயம்தான். எல் லோரும் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிருர்கள்.

அரு: கனகத்துக்கும் எனக்கும் திருமணமா? கருணாநிதி, மங்கி இருந்த என் வாழ்வில் மங்கள விளக்கை ஏற்றிவிட்டாய்.

கரு: பராமுகமேனே என்ற பல்லவிக்கே இனி இடம் இருக்கக்கூடாது பார்.

அரு: ஆம். பராமுகம் செய்தவர்களெல்லாம் என்னை இனிப் பாராட்டத்தான் செய்வார்கள்.

இராகம்: சௌராஷ்டிரம். தாளம்: ஆதி.

தயையும் பிறந்ததுவே—கடவுள்
தயையும் நிறைந்ததுவே!
ஜெயமுடன் புவிமேலே—இனிநான்
சிறப்பும் அடைவேனே!

---



# மதயானை

பாத்திரங்கள் :

1. அரசன்
2. தேவி (அரசனின் மனைவி)
3. அமைச்சர்
4. கானதேவன் (கலைஞன்)
5. மனைவி (கானதேவனின் மனைவி)

கதைச் சுருக்கம் :

மகர யாழில் வல்லவனுன கானதேவன் மதம் பிடித்த பட்டத்து யானையை, மகர யாழ் வாசித்து அடக்குகிருன். ஆனல் அவனைப் பிடித்திருந்த மதம் அடங்கிற்ரு ?

அரசன் :

## காட்சி 1

பட்டத்து யானையுமே
  பாழ்கொண்ட மதத்தாலே
திட்டத்து மீறிமிகக்
  தீங்குகளும் விளைத்ததுவே !
மக்களுமே கலங்கிமனம்
  மருண்டுமிக நொந்தனரே!
இக்கணமே யானைமதம்
  இனிதடக்க வழிகாண்பேன்!

[அரசனும், அவனது தேவியும்]

தேவி: அரசே, தாங்கள் இப்படி வருத்தமா யிருக்கக் காரணம்...

அரசன்: ஐராவதத்திற்கொப்பான நம் பட்டத்து யானைக்கு மதம் பிடித்துவிட்டது தேவி.

தேவி: என்ன, மதம் பிடித்துவிட்டதா? நாட்டிற்கே பெருந்தீங்காயிற்றே!

அர: ஆம், தேவி. எனக்கென்ன செய்வதென்றே ஒன்றும் புரியவில்லை. வெறிபிடித்த யானை வெகு சேதங்களை விளைவித்து வருகிறது. அதன் அட்டகாசம் பொறுக்க முடியவில்லை. மக்கள் மனம் கலங்கி வெளியே வருவதற்கு அஞ்சிக்கொண்டிருக்கின்றனர்.

தேவி: புகழ்பெற்ற யானைப் பாகனாலும் அடக்க முடியவில்லையா?

அர: யானைக்குரிய பாகனும் எத்தனையோ உபாயங்களைக் கையாண்டு பார்த்தான். அவனையே யானை கொன்றுவிடும் போலிருக்கவே அடக்கும் எண்ணத்தைக்கூட விட்டுவிட்டான். அறுந்த சங்கிலியுடன் அங்குமிங்கும் யானை திரிகிற திரிச்சல்...

தேவி: பச்சிளங் குழந்தைகள், வயது முதிர்ந்த கிழவர்கள் இன்னும் எத்தனையோ உயிர்கள் யானையிடம் சிக்கிக்கொண்டு அவதிப்பட்டு ஆவி துறக்க நேரிடுமோ என்பதை நினைக்கும் போது என் நெஞ்சமும் நடுங்குகிறது அரசே.

அர: எப்படி யானையை அடக்கும் வழியைப்பற்றி ஆலோசிக்க அமைச்சரை வரச்சொல்லி இருக்கிறேன் தேவி.

தேவி: அதோ அமைச்சரும் வந்துவிட்டார்.

அமை: அரசே, யானை ஆலயத்திற்குள் புகுந்து, பெரும் அட்டகாசம் புரியத் தொடங்கிவிட்டது. வழிபாட்டுக்கு வந்த பக்தர்கள் அனைவரும் வந்த வழி தெரியாமல் மருண்டோடினர். ஆலயத்தை மூடும்படி ஆணையிட்டு விட்டேன். இரண்டு கைக்குழந்தைகள் மரணத்தோடு போராடும்படியாய்விட்டது.

அர: என்ன, இரண்டு குழந்தைகள் பலியா? அமைச்சரே, எவர் செய்த தீவினையோ, எவரிட்ட சாபமோ தெரியவில்லை. மதம் பிடித்த யானையால் நாடே தத்தளிக்கும்படியான விபரீத கட்டம் சம்பவித்திருக்கிறது. யானையை அடக்குவார்கள் நம் நாட்டில் எவருமில்லையா?

அமை: எத்தனையோ கைதேர்ந்த யானைப் பாகர்களும், வேறு திறமைசாலிகளும் பலித்த மட்டும் பார்த்துத், திடுக்கிட்டுத் திரும்பிவிட்டார்கள், அரசே.

தேவி: அரசே, எனக்கொரு யோசனை தோன்றுகிறது. மத யானையை அடக்குபவருக்குத் தக்க சன்மானம் அளிக்கப்படும் என்று முரசறிவித்தால் யாராகிலும் முன் வரலாமல்லவா!

அர: ஆம், தேவி. நல்ல யோசனைதான். தேவியின் யோசனைப்படியே முரசறிவிக்கச் செய்து விடுங்கள் அமைச்சரே. ஒருவேளை இந்த முயற்சி பயனளித்தாலும் அளிக்கலாம்.

அமை: ஆக்ஞை அரசே.

## காட்சி 2

[கலைஞன் கானதேவனும், அவனது மனைவியும்]

கானதேவன்:

இன்னிசைக் கலையினில் எனக்கிணை யுண்டோ
இன்பநல் யாழினில் அன்பினை மீட்டிடும் (இன்)
மன்னரும் மகிழ்ந்திட மதங்கொள் யானையை
மாண்புடன் அடக்கி மாபுகழ் கொள்வேன் (இன்)
கலைத் திறம் காட்டிடும் தருணமும் வந்தது
கருதிட மனத்தினில் களிப்பும் நிறைந்தது
தலைவியாம் கலை யணங்கின் அருளால்
சீர்மத யானையைச் சிறப்புடன் வெல்வேன் (இன்)

மனைவி: என்ன, என்றுமில்லாத ஒரே உற்சாகமாக யிருக்கிறீர்கள்.

கான: ஆம் கமலவல்லி. கலைத்தேவியின் பரிபூரண கருணை இப்போது என்மீது விழுந்திருக்கிறது. இன்னிசை யாழினில் எனக்குள்ள இணையற்ற ஆற்றலைக் காட்டும் ஓர் அரிய தருணம் வாய்த்திருக்கிறது.

மனே : என்ன அப்படிப்பட்ட சந்தர்ப்பம்? நம் வாழ்வு உயரப்போகிறதா?

கான : அதுமட்டுமல்ல கமலவல்லி. மாநிலம் ஆளும் மன்னரே எனக்குத் தக்க மரியாதை செய்து கௌரவிக்கப் போகிருர்.

மனே : அப்படியா!

கான : உனக்கு ஆச்சரியமாய்த் தானிருக்கும். சற்று முன் முரசறிவித்தார்களே, அதைக் கேட்டாயல்லவா கமலவல்லி.

மனே : ஓ. இப்போது புரிந்துகொண்டேன், உங்களுக்கு வரப்போகும் ராஜயோகத்தை. பட்டத்து யானையை அடக்கப் போகிறீர்களா? ஏன் உங்களுக்கு இந்த வீண் சபலம்? எல்லோராலும் இயலாதென்று கைவிட்ட மத யானையை அடக்குவதற்கு உங்களால் ஆகுமா?

கான : இவ்வளவுதானு என்னைப்பற்றி நீ தெரிந்து கொண்டிருக்கிறது. என்னிடம் மகர யாழ் இருக்கிற தென்பதை மறந்து விட்டாயா கமல வல்லி. யானையை அடக்க முடியும் என்ற முழு நம்பிக்கையும் என்னிடம் நிறைந்திருக் கிறது.

மனே : அப்படியென்ருல் உங்கள் நம்பிக்கையைத் தடை செய்ய நான் முற்படவில்லை. உங்க ளுக்கு வெற்றி உண்டாகவே தேவியைப் பிரார்த்திக்கிறேன்.

## காட்சி 3

[அரசரும், அமைச்சரும், கானதேவனும்]

அமை: அரசே, முரசறிவித்ததில் யாழ் வாசிப்பதில் நிகரற்றவரான கானதேவர் ஒருவர் மட்டுமே நம் மதயானையை அடக்க முன் வந்திருக்கிருர்.

கான: அரசே, வணக்கம்.

அர: கானதேவரே, நீர் துணிந்து வந்திருப்பது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். மதயானையை உம்மால்...

கான: அரசே, ஒரு யாழ்ப் புலவனுல் யானையை அடக்க இயலுமா என்று தாங்கள் சந்தேகப்படுகிறீர்கள். இசையைக் கேட்டால் பட்ட மரம் கூடத் துளிர்த்து, ஆனந்தக் கண்ணீர் பெருக்கும். அமரர்கள் கூட கான இன்பத்தில் மயங்கி செய்தொழில் மறந்திருப்பர்.

அர: யாழிசைப்பதில் அவ்வளவு திறம் படைத்தவரா! நன்று. அமைச்சரே, கானதேவரை அழைத்துக்கொண்டு யானையிடம் செல்லுவோம்.

## காட்சி 4

[கானதேவன் யாழ் வாசித்து யானையை அடக்குதல்]

கானதேவன்:

கானத்தின் சுகத்தினில் உலகமும் மயங்கிடுமே
கல்லும் கொடும்விலங்கும் கனிந்தே உருகிடுமே

ஞானத்தின் வடிவினன் ஈசனும் ஏழிசையாய்
நாதத்தின் நிலையாய் நன்றே அமைந்தனனே

[யாழ் வாசிப்பு தொடர்ந்து ஒலித்துக்
கொண்டிருக்கிறது]

அர: இதுவரையிலும் கேட்டறியாத அமர கான மாகவல்லவா இருக்கிறது. அமைச்சரே, கானதேவன் என்ற பெயருக்கேற்பவே அற்புதமாக யாழ் வாசிக்கிறார்.

அமை: அரசே, இந்த உலகமே, அவரது யாழ் வாசிப்பில், கானத்தின் உண்மையான இன்பத்தை அநுபவித்துக்கொண்டு அமைதியில் ஆழ்ந்திருக்கிறது. அதோ பாருங்கள், வெறி பிடித்த நம் மதயானையும், யாழிசையைக் கேட்டுப் பயங்கரக் கர்ஜனையை நிறுத்தி, துதிக்கையைக் கீழ் தொங்க விட்டுக்கொண்டு, கானதேவரை அணுகுகின்றது.

அர: ஆம், அமைச்சரே. கானத்துக்கு எத்தகைய கொடிய மதம்பிடித்த விலங்கையும் கட்டுப் படுத்தும் வசிய சக்தி இருக்கிறதென்பதை இன்றுதான் நேரில் கண்டறிந்தேன்.

அமை: நச்சுப்பை கொண்டு படம் எடுத்தாடும் நாகப் பாம்பும், மகுடி இசையில் மயங்கித் தன் வசமிழந்திருக்கிறதென்றால், இசையின் மகத்துவத்தை, எளிதில் மதிப்பிட இயலுமா? அரசே, அதம் செய்துவந்த மதயானையும் யாழிசையில் மயங்கிக் கடைசியில், அடைக் கலம் புகுந்ததுபோல் மண்டியிட்டுவிட்டது.

அர: இப்போதுதான் என் பெருங் கவலை தீர்ந்தது. அமைச்சரே, கானதேவரைத் தக்கபடி கௌரவித்துப் பரிசளிக்க வேண்டும்.

அமை: அதுதான் இனி நாம் அடுத்தபடியாகக் கவனிக்கவேண்டிய கடமை, அரசே.

## காட்சி 5

[கானதேவனின் மதமான கோரிக்கையும், அரசனின் அமைதியான பதிலும்]

அர: கானதேவரே, யாழிசையில் உம்மை வெல்லக்கூடியவர் இந்த உலகில் எவருமே இல்லை யென்பது என் கருத்து. மதயானையை அடக்கி, உம் கலைத் திறத்தை அனைவரும் வியக்கும்படிச் செய்துவிட்டீர். நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் நீர் செய்த உதவி மிகவும் மகத்தானது.

கான: அரசே, என் யாழிசைக்கு இந்தப் பட்டத்து யானைமட்டும் என்ன, ஈரேழு பதினான்கு உலகங்களுமே தலைகுனியவேண்டும்.

அமை: அரசே, கானதேவரை நம் அரசாங்கத்தின் நிலையான கலைமணியாக ஆக்கிக்கொள்வது, நம் நாட்டிற்கே பெருமை தருமென்று நினைக்கிறேன்.

அர: நினைப்பதென்ன, அவ்விதம் செய்யவேண்டியதான். கானதேவரே, உங்கள் விருப்பம்...

கான: அதைப்பற்றி என் விருப்பமென்று ஒரு தனி விருப்பமில்லை அரசே. ஆனால் நான்

அரசாங்கத்தின் கலைமணியாவது இருக்கட்டும். தாங்கள் வாக்களித்தபடி எனக்கென்ன சன்மானம் பரிசளிக்கப் போகிறீர்கள்?

அர: உமது மனம் திருப்தி அடைகிறவரையில் உமக்கு கனகாபிஷேகம் செய்யலாமென்று உத்தேசித்திருக்கிறேன்.

கான: எனக்கேன் கனகாபிஷேகம்? பொன்னை மதிக்கும் கலைப் புலவனல்ல நான்.

அமை: உமது விருப்பத்தைத் தயங்காமல் தெரிவிக்கலாம். அரசர் மறுப்பதற்கில்லை.

கான: நான் செய்த பேருதவிக்கு நான் விரும்புவது பட்டத்து :யானை.

அர: என்ன, பட்டத்து யானையையா பரிசாகக் கேட்கிறீர்.

கான: ஆம், அரசே. நான் கேட்பது பட்டத்து யானையேதான். அடக்குபவர் விரும்பும் பொருளைப் பரிசளிப்பதாக அறிவித்த உங்கள் சத்திய வாக்கை நிறைவேற்றிவைக்க வேண்டியது உங்கள் கடமை.

அமை: கானதேவரே, சற்றுச் சிந்தித்து அரசரிடம் கேளுங்கள்.

கான: நன்றாகச் சிந்தித்துத்தான் கேட்கிறேன். நான் கேட்ட பரிசைக் கொடுப்பதற்கு ஏன் இப்போது தயங்கவேண்டும். அரசர் வாக்குத் தவருதவர் என்று அகிலம் புகழ்ந்து கொண்டாடுவதெல்லாம் வீண்தானு?

அமை: இது அறச் செங்கோல் பிடித்து அரசர் வீற்றிருக்கும் சபை. சற்று நிதானத்துடன் பேசுங்கள் கலைஞர் திலகமே. நாட்டுக்கும், அரசாங்கத்துக்கும் உரிமைப் பொருளாக் இருக்கும் ஒரே பட்டத்து யானையை எப்படிப் பரிசாக அளிக்க முடியும், பட்டத்து யானை மன்னரின் சொத்தல்லவே.

கான: யார் சொத்தாயிருந்தால் எனக்கென்ன? நான் துணிந்து பரிசாகக் கேட்ட பொருளைத் தவிர வேறு எதுவும் பெற்றுக்கொள்ளச் சித்தமாயில்லை.

அர: கானதேவரே, கலை தேவியின் பூரண அநுக்கிரகம் பெற்ற நீர், கருத்தழிந்து பேசுவது எனக்கு வியப்பாகவே இருக்கிறது. மக்கள் விரும்பினாலன்றி நானாகப் பட்டத்து யானையைக் கொடுப்பதற்கில்லை. உமக்காக வேண்டி நீர் என் அரச பதவியைக் கேட்டாலும்கூட நான் தயங்கப் போவதில்லை. ஆனால் ஒன்று நீர் சிந்திக்கவேண்டும்.

கான: என்ன?

அர: இசையில் வல்லவரான நீர் மகர யாழ் மீட்டி மதங்கொண்ட யானையை அடக்கிவிட்டீர். அது ஒரு பெரிய காரியமல்ல.

கான: காரியமல்லவா?

அர: பதறாமல் கேளும். உம் கலைத்திறனால் கருத தழிந்துபோய், உமது மதியைக் குலைக்கும் அந்த

மதத்தை அடக்க வகையறியாது, பட்டத்து யானையையே பரிசாகக் கேட்கத் துணிந்து விட்டீர். எவ்வளவு மதம்பிடித்த எண்ணம் என்பதைச் சிறிதும் எண்ணிப் பார்த்தீரா? ஒவ்வொருவரையும் அறிவைக் கெடுத்து உள்ளிருந்து ஆட்டிவைக்கும் மதம் ஒழியவேண்டும். யானையை அடக்குவதைவிட அதுவே கடினமான காரியம்.

கான : அப்படியா? ஆம் அரசே, இப்பொழுதான் அகக்கண் திறந்தது. உண்மையுணர்ந்தேன். என்னை மன்னிக்கவேண்டும்.

அரசன் :

மதுர இசைபொழியும் மகர யாழ்மீட்டி
மதங்கொண்ட யானையின் மதத்தினை அடக்கிட்டீர்

மதமென்னும் தீய மமதை யானையை – நீர்
மதியுடன் அடக்கிடவே மார்க்கமும் அறியீரோ?

ஆழ்ந்த கலைஞானம் அமைந்தும் பயனுண்டோ?
அகங்காரமும் மதமும் அழிந்திட வேண்டுமன்றோ!

தாழ்வில்லா அறிவால் தன்மைமிகும் நிறைவால்
தரணிபுகழ் அடைந்தே தரமுடன் உயர்ந்திடலாம்!



---